10th February 1959]

*State Trading in Foodgrains*

* 193 *Q*.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government have received any scheme from the Planning Commission regarding State Trading in foodgrains; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes.

(*b*) It is not in the public interest to reveal the details of the scheme at this stage.

* 194 *Q*—SRI P. G. MANICKAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை சர்க்காரே உணவு தான்ய வியாபாரம் நடத்தும் திட்டம் பற்றிய பரிசீலனை ஏதாவது நடத்தப்பட்டு வருகிறதா ?

(ஆ) இது சம்பந்தமாக மத்திய சர்க்காரோடு சென்னை சர்க்காரால் நடத்தப்பட்டு வரும் கடிதப்போக்குவரத்து விவரங்கள் யாவை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes.

(*b*) It is not in the public interest to reveal the correspondence with the Government of India at this stage.

SRI M. D. THIAGARAJAN : மில் சொந்தக்காரர்கள் வெளிமாநிலங்களிலிருந்து லாரிகளில் உணவு தானியங்களை அதிகமான விலைக்கு வாங்கிவந்தார்கள். இப்போது, அரசாங்கத்தார் உணவு தானியங்களுக்கு அதிகபட்ச விலை நிர்ணயித்திருப்பதால் அவர்கள் வெளிமாநிலங்களிலிருந்து அவைகளை வாங்கிவரத் தயங்குகிறார்கள். இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு அரசாங்கம் என்ன ஏற்பாடு செய்ய உத்தேசித்திருக்கிறது.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கேரளாவில் அதிகப்பட்ச விலை இன்னும் நிர்ணயிக்கப்படாமல் இருப்பதால் இவ்வாறெல்லாம் சொல்லப்படுகிறது. கேரளாவில் சீக்கிரத்திலேயே அதிகப்பட்ச விலை நிர்ணயிக்கப்படும் என்று ஏற்கெனவே சொன்னேன். நமது ராஜ்யத்தில் அதிகப்பட்ச விலை இந்த மாதம் 2-ம் தேதியிலிருந்து தான் அமுலுக்கு வந்திருக்கிறது. ஒருசில நாட்கள் வரை இந்தக் கோளாறுகள் இருக்கலாம். இந்தக் கோளாறுகள் மிகைப்படுத்தப்படுகின்றன என்று தான் நான் நினைக்கிறேன்.

SRI K. B. S. MANI : தென் மண்டலத்திலுள்ள மற்ற ராஜ்ய அரசாங்கங்கள், தங்களுடைய பற்றுக்குறையை சரிப்படுத்துவதற்காக நம்முடைய அதிகப்பட்ச விலையைவிட அதிகமாக தங்கள் ராஜ்யங்களில் அதிகப் பட்ச விலையை நிர்ணயித்துவிட்டால், அப்போது நமது வியாபாரிகளும் விவசாயிகளும் பாதிக்கப்படுவார்கள். நமது ராஜ்ய வியாபாரிகளும் விவசாயிகளும் அவ்வாறு பாதிக்கப்படக்கூடிய காலத்தில் அவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்க நமது அரசாங்கம் ஏதாவது ஏற்பாடு செய்திருக்கிறதா ?

MR. SPEAKER : இது ஒரு " ஹைபாதெடிகல் " கேள்வியாக இருக்கிறது. இதற்கு கனம் அமைச்சர் பதிலளிக்கப்போகிறாரா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்கு பதிலளிக்கிறேன். கேரள அரசாங்கத்தில் நிர்ணயிக்கப்படும் அதிகப்பட்ச விலை நமது ராஜ்யத்தின் அதிகப்பட்ச விலையை ஒட்டியிருக்கும். அந்த அதிகப்பட்ச விலையையும் கேரள அரசாங்கம் இன்னும் நிர்ணயிக்கவில்லை. அதை மத்திய அரசாங்கம்தான் நிர்ணயிக்கிறது.